ஓம் அகத்தீசாய நம

ரூ.10/-

# ஞானத்திருவடி

சன்மார்க்க உண்மைப் பத்திரிக்கை

விரோதி - பங்குனி - மார்ச் 2010





அழைத்தால் அக்கணமே வந்து
அருள் செய்யும் மகான் அகத்தியர்

## துறையூர் ஓங்காரக்குடிலுக்கான வழித்தடங்கள்

திருச்சி – மண்ணச்சநல்லூர் – புலிவலம் – துறையூர்.

சேலம் – தம்மம்பட்டி – துறையூர்.

சென்னை – பெரம்பலூர் – துறையூர்.

கரூர் – குளித்தலை – முசிறி – துறையூர்.

நாமக்கல் – தாத்தையங்கார்பேட்டை – துறையூர்.




SALEM
VALAPADI
Jarugumalai Reserved Forest
Thammampatti
Manmalai Reserved Forest
Veppadi & Nagoor Reserved Forest
Nagoor Reserved forest
Pelur Reserved Forest
PERAMBALUR
NAMAKKAL
ONGARAKUDIL
THURAIYUR
Tattayangarpettai
PULIVALAM
KARUR
MUSIRI
MANNACHANALLUR
Kolldam River
TRICHY
10 km
10 mi

**www.agathiar.org** என்ற இணைய தளத்திற்கு சென்று ஓங்காரக்குடில் ஆசான், சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்** அருளிய அருளுரைகளை கேட்டுப் பயன்பெறுக.

5-2

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

14206

# ஞானத்திருவடி

ஒங்காரக்குடில் ஆசான் அருளிய சன்மார்க்க உண்மைப் பத்திரிக்கை

விரோதி ◎ பங்குனி (மார்ச் – 2010) விலை: ரூ.10/–

நிறுவனர்,
சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு
தவத்திரு ரெங்கராஜதேசிக சுவாமிகள்



உள்ளடக்கம்



ஓங்காரக்குடில் ஆசான்

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகளிடம்

ஆசிபெறும் நேரம்

தினசரி காலை 9.30 முதல் 11 மணி வரை மட்டுமே

மகான் திருவள்ளுவர் திருவடிகள் போற்றி



# "வெகுளாமை"

செல்இடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்இடத்துக்
காக்கின்என் காவாக்கால் என். 301

செல்லா இடத்துச் சினம்தீது; செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற. 302

மறத்தல் வெகுளியை யார்மாட்டும்; தீய
பிறத்தல் அதனான் வரும். 303

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற. 304

தன்னைத்தான் காக்கின் சினம்காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். 305

சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்
ஏமப் புணையைச் சுடும். 306

சினத்தைப் பொருள்என்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 307

இணர்எரி தோய்வுஅன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 308

உள்ளியது எல்லாம் உடன்எய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின். 309

இறந்தார் இறந்தார் அனையர்; சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 310

தந்தாயே ஞானத்திருவடி எனும் ஞானநூலை
தவசிறப்பை மக்களுக்கு அளிப்பதற்கு
தந்திட்ட தவநூல் ஞானத்திருவடி நூல்
தன்னிகரில்லா நூல் தவத்தினை உணர்த்தும் நூல்

உணர்த்தும் நூல் உண்மைவழி சொல்லும் நூல்
உயர்வுதரும் நூல் ஞானத்திருவடி நூலே
உணர்ந்துமே ஒவ்வொரு சொல்லையும் படிப்போர்
உயர்வுதான் பெற்றிடுவார் திண்ணம் ஐயா

– மகான் அருள்நந்தி சிவாச்சாரியார் ஆசிநூல்.

அன்பார்ந்த வாசகர்களுக்கு வணக்கம்,

**ஞானத்திருவடி நூலே ஞானிகள் திருவடியாகும்.**

ஞானத்திருவடி என்னும் நூல் முற்றுப்பெற்ற மகான்களைப் பற்றி பேசுவதாகும். இந்நூலை வாங்குதல், படித்தல், மற்றவர்களுக்கு வாங்கிக் கொடுத்தல் ஆகிய அனைத்துமே ஜென்மத்தை கடைத்தேற்ற உதவும். எனவே இந்நூல் ஞானவாழ்வு விரும்புகிறவர்களுக்கு ஒரு வரப்பிரசாதம் ஆகும். இந்நூல் வீட்டில் இருந்தால் நவகோடி சித்தர்களும், சித்தர்களுக்கெல்லாம் தலைவராகிய அகத்தீசரும், அவருக்கு ஆசானாகிய சுப்ரமணியரும் நமது வீட்டில் இருந்து அருள்செய்வதாக எண்ணவேண்டும்.

மேலும் ஓங்காரக்குடில் ஆசான் 33 ஆண்டுகாலம் ஓங்காரக்குடிலில் கடுந்தவம் இருந்து வருகிறார்கள். உலக மக்களை கடவுளின் பிள்ளைகளாக பார்த்து, அவர்களுக்கு வரும் துன்பங்களிலிருந்தும், துயரங்களிலிருந்தும் விடுவித்து ஞானியர்களின் திருவடிதான் உண்மை ஆன்மீகம் என்று சொல்லி அவ்வழியில் நம்மை அழைத்துச் செல்லும் ஓங்காரக்குடில் ஆசான் சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு **தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகள்** அவர்கள், ஞானிகளின் பாடல்களில் தான் உணர்ந்த பல இரகசியங்களை நம்பால் கருணைக்கொண்டு எளிய முறையில் அருளிய அருளுரைகள் அடங்கியதுதான் **ஞானத்திருவடி** நூல்.

வாசகர்களின் வேண்டுகோளுக்கு இணங்க இனி வருங்காலத்தில் ஆங்கில மாதம் முதல் தேதிக்கு ஞானத்திருவடி நூல் வெளிவரும். ஞானத்திருவடி இதழின் விற்பனையின் மூலம் வரும் வருமானம் முழுவதும் அன்னதானப் பணிக்கே!

அன்புடன்,
இரா.மாதவன்.

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

## தவத்திரு **ரெங்கராஜதேசிக சுவாமிகளின் அருளுரை**

# திருக்குறள்

## வெகுளாமை – அதிகாரம் 31

ஒரு மனிதன் பலருடன் நட்பு பாராட்டக் கூடியவனாக இருத்தல் வேண்டும். அத்தகையவர்களைப் பலர் சூழ்ந்து இருப்பர். அவ்வாறு இல்லையெனில் அவன் தனித்துக் காணப்படுவான். சாதியின் அடிப்படையிலோ, இனத்தின் அடிப்படையிலோ ஒன்று சேர்தல் நட்பு எனக் கூற இயலாது. இனிமையாகப் பேசுவது மனம் விட்டுப் பழகுவது மன்னிக்கும் மனப்பான்மை, பிறர்க்கு உதவும் எண்ணங்கள் கொண்டவர்களிடம் உள்ள நட்பு உயர்ந்த நட்பாகக் கருதலாம். இத்தகைய நட்புக்குக் கெடுதல் பயக்கக்கூடியது மனிதனுடைய கோபம். பல ஆண்டுகள் நட்புறவு கொண்டிருந்தாலும் ஒரு நொடிப்பொழுதில் உண்டாகின்ற கோபமானது அதனைக் கெடுத்துவிடும். பல நன்மைகளையும் மறந்து ஒருவருக்கொருவர் எதிரியாகின்ற சூழல் உருவாகிவிடும். இத்தகைய கோபம் மனிதனுக்கு மட்டுமல்லாமல் உலகில் உள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் உண்டு. இது இயற்கை.

எப்பொழுது மனிதன் தோன்றினானோ அப்பொழுதே காமம், வெகுளி, மயக்கம் மூன்றும் அவனுடனேயே இருந்தன. வெகுளி என்பது கோபம். மயக்கம் என்பது நிலையில்லாததைக் கண்டு மயங்குதல். அவா, வெகுளி, இன்னாச்சொல், பொறாமை, பேராசை, வன்சொற்கள் இத்தகைய குணக்கேடுகள் மனிதவர்க்கம் தோன்றும் போதே வந்தன. இதனால் மனிதன் மேல் நிலை அடைய முடியாது. இத்தகைய குணக்கேடுகள் இல்லாதிருந்தால் அவன் மரணமில்லாப் பெருவாழ்வு அடையலாம். குணக்கேடுகளால் பாவம் சூழும்.

கோபம் என்பது ஒரு வகை மாயை. கோபத்தால் மற்றொருவர் மனம் புண்பட்டால் நம்முடைய ஆன்மா மாசுபடும். மூர்க்ககுணம் மிகுதியானால் நம்முடைய மனம் இருட்டாகும். மேலும் இதயம் மாசுபடும். அறிவு மழுங்கிவிடும். அறிவு மழுங்கினால் எந்தக் காரியத்தையும் திறம்படச் செய்ய முடியாமல் போகும். குடும்பத்தில் நிம்மதி கெடும்.

கோபத்தால் ஒருசிலர் கொடுமையாகப் பேசுவார்கள். அதனால் சிலர் மனம் புழுங்கிச் சாகக்கூடிய துயரத்தை அடைவார்கள். சினம் கொண்டவர்களை மற்றவர்கள் பாவி

என்று கடிந்து கூறுவதால் ஆயுள் குறைந்து நோய்வாய்ப்பட்டு மடிவார்கள். குடும்பத்தில் உள்ளவர்கள் கோபப்படுவதால் கணவன் மனைவியிடத்தில் பிரச்சனை மேலோங்கி வாழ்க்கைக் கெட்டு குழந்தைகள் எதிர்காலமும் பாழ்பட்டுப் போகும். சிலர் சினத்தால் பகையை உண்டாக்கி அந்தப் பகை, கொலையாய் முடிந்து ஆயுள் முழுக்க சிறைவாசமும் அடைவர். கொலை செய்த பாவத்திற்கும் ஆளாகின்றனர்.

சில நேரங்களில் நம்மைச் சிலர் ஏமாற்றிவிடுவது உலக நடையின் இயல்பு. அவர்களை மன்னித்து விடுவது நல்லது. அவர்களுக்கு நாம் தண்டனைக் கொடுக்க முற்பட்டால் அதனால் நமக்கு பாவம் வந்துசேரும். அதே நேரத்தில் உலக மக்களிடம் எச்சரிக்கையாகவும் நடந்து கொள்ளுதல் வேண்டும்.

கோபத்தின் காரணமாக அவசர புத்தியில் நிரபராதியைக் கூட தண்டித்து விடுவார்கள். அதனால் நமக்குப் பாவம் சூழும். பொருள் வெறியாலும் 'நான்' என்ற ஆணவத்தாலும் காமவெறியாலும் கோப உணர்வு மேலோங்கிப் பலருடைய வாழ்க்கை அழிவதற்குக் காரணமாக உள்ளது. முன் செய்த பாவத்தின் காரணமாக கோபம் உண்டாகி அது மேலும் நம்மை நரகத்தில் தள்ளி விடுகிறது. கோபம் என்பது இந்த உலகத்தையே ஆட்டிப் படைக்கிறது. அத்தகைய கோபத்தை திருவருள் துணைகொண்டு போக்க முடியும். இதயத்தில் கோபம் இருந்தால் முகம் கடுகடுப்பாகவும் கண்கள் சிவந்தும் காணப்படும். முகத்துக்கென்று உள்ள மலர்ச்சி கெட்டுவிடும். எல்லாவித குணப்பண்புகள் இருந்தாலும் கோபத்தால் செய்யக்கூடிய நற்காரியங்கள் தடைபட்டுத் தீமையை விளைவிக்கும்.

கோபம் என்ற பாவி பலரைக் கெடுத்திருப்பான். அவன் வேறு எங்கும் இல்லை. நமக்குள்ளே இருக்கின்றான். அவன் ஒவ்வொரு மனிதனையும் ஆட்டிப் படைக்கின்றான். வறுமையின் காரணமாகவும் இயலாமையின் காரணமாகவும் கோபத்தை அடக்கிக் கொள்வானே தவிர எல்லா மனிதர்களுக்கும் கோபம் என்பது இயற்கையாகவே உள்ளது. அத்தகைய கொடுமையான மாயையிலிருந்து நம்மை நாம் காப்பாற்றிக் கொள்வது எப்படி? சாந்தமே வடிவானவர்கள் நிர்குணம் உள்ளவர்களின் திருவடிகளைப் பற்றுதல் வேண்டும். அவர்கள் நம்மைச் சாந்தமாக்கித் தம்முடன் ஆட்படுத்திக் கொள்வார்கள். அவர்கள் சினமற்று, காமமற்று ஒளிநிலையாய் இருப்பவர்கள்.

கோபத்தால் நாம் செய்த பாவத்தை நாமே அனுபவிக்க வேண்டும். துன்பம் அனுபவிக்க அனுபவிக்க வினைகள் தீரும். வினைகள் தீர்ந்தால் சிறப்பறிவு

உண்டாகும். சிறப்பறிவால் வன்மனம் தீரும். வன்மனம் தீர்ந்தால் மெய்யுணர்வு வரும். மெய்யுணர்வு, தலைவனிடம் உருகித் தியானிக்கும் பக்குவத்தை உண்டாக்கும். நன்னெறி நூல்களான திருஅருட்பா, திருமந்திரம் போன்ற நூல்களைப் படித்து உண்மையை உணர்ந்துகொள்ளவேண்டும். புண்ணியத்தையும் பூஜைகளையும் செய்ய வேண்டும். நாடாளும் மன்னர்களுக்கு கோபம் வந்தால், நாட்டில் நீதி தவறிவிடும். மக்கள் அல்லலுறுவார்கள். இல்லறத்தான் கோபம் கொண்டால், குடும்பத்தில் பிரச்சினை உண்டாகி குடும்பம் கெட்டு விடும். சினம் நட்பை முறிக்கும். பிச்சை எடுப்பவனுக்குக் கோபம் வரக்கூடாது. முன் செய்த பாவத்தின் காரணமாகவே இந்த நிலைக்கு வந்துள்ளான். இன்னும் கோபம் காட்டினால் அவன் அவமானங்களையே சந்தித்துக் கீழ் நிலைக்குச் செல்வான். துறவு கொள்பவர்கள் கோபம் கொண்டால், அவர்களின் கோபம் பலரை அழிக்கும். ஆனால், அது துறவுக்கான இலட்சியத்தைக் கெடுத்து, தவம் கெட்டு விடச்செய்யும்.

எளியவரிடம் கோபம் காட்டினால் பாவம் சூழும். வலிமையுள்ளவர்களிடம் காட்டினால் எதிர்ப்பு உண்டாகித் தீமை உண்டாகும். கோபம் கொண்டவன் பிணத்திற்கு சமமானவன். அத்தகைய கோபத்தை, கோபத்தை வென்றவர்களின் திருவடி பற்றிப் போக்கிக் கொள்ளுதல் வேண்டும். அவர்கள் நம் குணக்கேட்டைப் போக்கி, நம்மை நல்வழிப்படுத்தி, தங்களுக்கு நிகராக நம்மை உயர்த்தி விடுவார்கள்.

திருஅருட்பிரகாசவள்ளலார், நந்தீசர், அகத்தீசர் போன்றவர்களைத் தியானிக்க வேண்டும்.

- வலியவரிடத்தில் சினம் கொள்வது தீமையானது.
- எளியவரிடத்தில் சினம் கொள்வது பாவத்தை உண்டாக்கும்.
- சினம் ஒருவருக்கு தீமை பயக்கக் கூடியதாகும்.
- சினம் முகமலர்ச்சியையும், அகமலர்ச்சியையும் கெடுத்துவிடும்.
- தன்னை காப்பவன் சினம் காப்பான்.
- சினம் சேர்ந்தவரை அழிக்கும் நெருப்பு.
- தவத்தில் சிறந்தவர்கள் பிறர் மீது கோபம் கொண்டால் தவம் கெடும்.
- சினத்தை தவிர்ப்பவன் பல நன்மைகளை அடைவான்.
- சினத்தை துறந்தவர் தவத்தில் வெற்றி பெறுவார்.

தொடர் . . .

ஓங்காரக்குடில் ஆசான் அருளிய

## ஏழைகளுக்குப் பசியாற்றிவைத்தால் வரும் நன்மைகள்

469) ஏழைகளுக்கு பசியாற்றி வைத்தால் மிக்க பேராசை உடையவன் அவமானத்திற்கு உட்படுவதோடு மட்டுமல்லாது பல துன்பங்களுக்கும் ஆட்படுவான் என்பதை அறியலாம்.

470) ஏழைகளுக்கு பசியாற்றி வைத்தால் தேகத்தின் பெருமையை அறிந்தவனே ஞானியாவான்.

471) ஏழைகளுக்குப் பசியாற்றிவைத்தால் கூடுவிட்டு கூடுபாயும் சக்தியைப் பெறலாம்.

472) ஏழைகளுக்குப் பசியாற்றிவைத்தால் யாவரும் காணாமல் உலாவலாம்.

473) ஏழைகளுக்குப் பசியாற்றிவைத்தால் தன்னை மறைத்தும் கொள்ளலாம், வெளிப்படுத்தியும் கொள்ளலாம்.

474) ஏழைகளுக்குப் பசியாற்றிவைத்தால் அணுவில் அணுவாகலாம்.

● முற்றும்

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு,

தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**

அவர்கள் தலைமையில்

## பௌர்ணமி திருவிளக்கு பூஜை

நாள் : **29.03.2010 - திங்கட்கிழமை, காலை 10 மணி அளவில்**

இடம் : **ஓங்காரக்குடில், துறையூர்.**

அன்புடையீர் வணக்கம்,

துறையூர் ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்கத்தின் சார்பாக நடைபெறும் திருவிளக்கு பூஜையில் கலந்துகொண்டு ஞானிகளின் ஆசிபெற அன்புடன் அழைக்கின்றோம். அது சமயம் ஞானிகளை பூஜித்த அருட்பிரசாதம் (அன்னதானம்) வழங்கப்படும்.

இந்த பௌர்ணமி திருவிளக்கு பூஜைக்கு 10 மூட்டை அரிசி

அன்னதானத்திற்குக் கொடுத்து பூஜை செய்பவர்கள்

**P.ஜெயபாலு,** கோயம்புத்தூர்.

**A.மணிவாசகன்,** சேலம்.

## துவக்கப்பாடல்

திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.

திருமந்திரம் : திருவடிப்பேறு : 1598

ஞானியர்களின் திருவடி பூஜைதான் உண்மை ஆன்மீகம் என்று உலகறியச் செய்யும் வள்ளல்,

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்** அவர்கள்

**தொகுத்து வழங்கிய**

# சித்தர்கள் போற்றித் தொகுப்பு

| | | | |
|---|---|---|---|
| ஓம் | அகத்தியர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அகப்பைச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அசுவினித்தேவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அத்திரி மகரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அநுமான் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அம்பிகானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அருணகிரிநாதர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அருள்நந்திசிவாச்சாரியார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அல்லமாபிரபு | திருவடிகள் போற்றி | |
| ஓம் | அழுகண்ணிச்சித்தர் | திருவடிகள் போற்றி | 10 |
| ஓம் | இடைக்காடர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | இராமலிங்கசுவாமிகள் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | இராமதேவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | இராமானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | உமாபதி சிவாச்சாரியார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஔவையார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கஞ்சமலைச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கடைப்பிள்ளைச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கடுவெளிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கண்ணானந்தர் | திருவடிகள் போற்றி | 20 |

| | | | |
|---|---|---|---|
| ஓம் | கண்ணிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கணநாதர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கணபதிதாசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கதம்பமகரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கபிலர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கமலமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கருவூர்தேவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கல்லுளிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கலைக்கோட்டு முனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கவுபாலச்சித்தர் | திருவடிகள் போற்றி | 30 |
| ஓம் | கனராமர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | காகபுஜண்டர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | காசிபர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | காலாங்கிநாதர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | குகைநமச்சிவாயர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | குதம்பைச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | குமரகுருபரர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | குருதட்சணாமூர்த்தி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | குருராஜர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | குறும்பைச்சித்தர் | திருவடிகள் போற்றி | 40 |
| ஓம் | கூர்மானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கொங்கணேஸ்வரர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கோரக்கர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கௌசிகர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | கௌதமர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சங்கமுனிச் சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சங்கர மகரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சங்கிலிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சச்சிதானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சட்டநாதர் | திருவடிகள் போற்றி | 50 |
| ஓம் | சண்டிகேசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சத்யானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சிவயோகமாமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சிவவாக்கியர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சிவானந்தர் | திருவடிகள் போற்றி | |

| | | | |
|---|---|---|---|
| ஓம் | சுகப்பிரம்மர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சுந்தரானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சுந்தரமூர்த்தி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சூதமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சூரியானந்தர் | திருவடிகள் போற்றி | 60 |
| ஓம் | சூலமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சேதுமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | சொரூபானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜம்பு மகரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜமதக்னி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜனகர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜனந்தனர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜனாதனர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜனக்குமாரர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஜெகநாதர் | திருவடிகள் போற்றி | 70 |
| ஓம் | ஜெயமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ஞானச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | டமாரானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | தன்வந்திரி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | தாயுமான சுவாமிகள் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | தானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | திரிகோணச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | திருஞானசம்பந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | திருநாவுக்கரசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | திருமாளிகைத் தேவர் | திருவடிகள் போற்றி | 80 |
| ஓம் | திருமூலதேவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | திருவள்ளுவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | தூர்வாசமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | தேரையர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | நந்தனார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | நந்தீஸ்வரர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | நாதாந்தச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | நாரதர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | நொண்டிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பட்டினத்தார் | திருவடிகள் போற்றி | 90 |

| | | | |
|---|---|---|---|
| ஓம் | பத்ரகிரியார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பதஞ்சலியார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பரத்துவாசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பரமானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பராசரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பாம்பாட்டிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பிங்களமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பிடிநாகீசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பிருகுமகரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பிரும்மமுனிவர் | திருவடிகள் போற்றி | 100 |
| ஓம் | பீர்முகமது | திருவடிகள் போற்றி | |
| ஓம் | புண்ணாக்கீசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | புலத்தீசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | புலிப்பாணிச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | பூனைக்கண்ணார் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | போகமகாரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மச்சமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மஸ்தான் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மயூரேசர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மாணிக்கவாசகர் | திருவடிகள் போற்றி | 110 |
| ஓம் | மார்க்கண்டேயர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மாலாங்கன் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மிருகண்டரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | முத்தானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மெய்கண்டதேவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | மௌனச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | யாகோபு | திருவடிகள் போற்றி | |
| ஓம் | யூகிமுனிவர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | யோகச்சித்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | யோகானந்தர் | திருவடிகள் போற்றி | |
| ஓம் | ரோமரிஷி | திருவடிகள் போற்றி | 121 |
| ஓம் | வசிஷ்டமகரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | வரதரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | வரரிஷி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | வராகிமிகி | திருவடிகள் போற்றி | |
| ஓம் | வால்மீகி | திருவடிகள் போற்றி | |

ஓம் விசுவாமித்திரர் திருவடிகள் போற்றி
ஓம் வியாக்ரமர் திருவடிகள் போற்றி
ஓம் வியாசமுனிவர் திருவடிகள் போற்றி
ஓம் விளையாட்டுச்சித்தர் திருவடிகள் போற்றி
ஓம் வேதாந்தச்சித்தர் திருவடிகள் போற்றி 131
ஓம் எண்ணிலா கோடி சித்தரிஷி கணங்கள்
திருவடிகள் போற்றி போற்றி.

## நிறைவுப்பாடல்

வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே.

திருமந்திரம் 3047

மேற்கண்ட 131 சித்தர்கள், மகான்களின் திருவடிகளை தினசரி காலையும் மாலையும் போற்றி பூஜை செய்வதே சிறப்பறிவாகும். சிறப்பறிவு பெற்றவர்களுக்கு குடும்ப ஒற்றுமை, புத்திர பாக்கியம், உடல் ஆரோக்கியம் போன்ற நல்வினைகள் பெருகி, மது அருந்துதல், புலால் உண்ணுதல், சூதாடுதல் போன்ற தீவினைகள் நீங்கிவிடும். மேலும், மாதம் ஒருவருக்கோ அல்லது இருவருக்கோ பசித்த ஏழைகளுக்கு பசியாற்றியும் வந்தால், பாவம் புண்ணியம் பற்றி உணர்ந்து புண்ணியம் பெருகி ஞானியாவார்கள் என்பது சத்தியம்.

குறிப்பு : மனுமுறை கண்ட வாசகத்தையும், சித்தர்கள் போற்றித் தொகுப்பையும் தினசரி பாராயணம் செய்து வருபவர்கள் தன்னையும், தலைவனையும் அறிந்து மரணம் இல்லா பெருவாழ்வு பெறுவார்கள்.

ஞானிகள் திருஉருவப்படங்கள் மற்றும்
ஓங்காரக்குடிலாசானிடம் தீட்சை பெற விரும்புகிறவர்கள் தொடர்புக்கு
**ந.நடராஜன்,** கொள்கை பரப்பாளர்,
ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்கம்,
ஓங்காரக்குடில், துறையூர்.
✆ 04327–255784, செல்: 98947 55784, 94883 91565

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரும் ஜீவகாருண்ய வள்ளலுமாகிய மகான் இராமலிங்க சுவாமிகள் அருளிய மனுமுறை கண்ட வாசகத்தை நித்திய பாராயணம் செய்பவர்கள் முன்செய்த பாவங்கள் நீங்கி புண்ணியங்கள் பெறுவார்கள். மேலும் வாழ்க்கையில் எது புண்ணியம்? எது பாவம்? என்று அறிகின்ற சிறப்பறிவு உண்டாகும். பாவ புண்ணியத்தை அறிகின்ற அறிவுதான் சிறப்பறிவாகும். சிறப்பறிவு உள்ள மக்கள் தான் தன்னையும் தலைவனையும் அறிந்தவர்கள் ஆவார்கள். தன்னையும் தலைவனையும் அறிந்தவர்கள் தான் ஞானிகள் ஆவார்கள். எனவே மனுமுறை கண்ட வாசகத்தையும், சித்தர்கள் போற்றித் தொகுப்பையும் பக்தி விசுவாசத்தோடு பாராயணம் செய்பவர்கள் வாழ்க்கையில் பல முன்னேற்றங்கள் உண்டாகும். ஞானமும் கைகூடும். போற்றுவோம் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய இராமலிங்க சுவாமிகளை! பெறுவோம் பெருமைக்குரிய வாழ்வை!!

# மனுமுறை கண்ட வாசகம்

**நாம் புண்ணியவான் ஆவதற்கு, அருட்பெருஞ்சோதி ஆண்டவராகிய ஆசான் இராமலிங்க சுவாமிகள் அருளிய அருள் வாக்கு**

1. நல்லோர் மனதை நடுங்கச் செய்தேனோ!
2. வலிய வழக்கிட்டு மானங் கெடுத்தேனோ!
3. தானங் கொடுப்போரைத் தடுத்து நின்றேனோ!
4. கலந்த சினேகிதரைக் கலகஞ் செய்தேனோ!
5. மனமொத்த நட்புக்கு வஞ்சகஞ் செய்தேனோ!
6. குடிவரி உயர்த்திக் கொள்ளை கொண்டேனோ!
7. ஏழைகள் வயிறு எரியச் செய்தேனோ!
8. தருமம் பாராது தண்டஞ் செய்தேனோ!
9. மண்ணோரம் பேசி வாழ்வழித் தேனோ!
10. உயிர்கொலை செய்வோர்க்கு உபகாரஞ் செய்தேனோ!
11. களவு செய்வோர்க்கு உளவு சொன்னேனோ!
12. பொருளை இச்சித்துப் பொய்சொன் னேனோ!
13. ஆசை காட்டி மோசஞ் செய்தேனோ!
14. வரவுபோக் கொழிய வழியடைத் தேனோ!
15. வேலை யிட்டுக் கூலி குறைத்தேனோ!
16. பசித்தோர் முகத்தைப் பாராதிருந் தேனோ!
17. இரப்போர்க்குப் பிச்சை இல்லை யென்றேனோ!

18. கோள் சொல்லிக் குடும்பங் கலைத்தேனோ!
19. நட்டாற்றில் கையை நழுவ விட்டேனோ!
20. கலங்கி ஒளிந்தோரைக் காட்டிக் கொடுத்தேனோ!
21. கற்பழிந் தவளைக் கலந்திருந் தேனோ!
22. காவல் கொண்டிருந்த கன்னியை அழித்தேனோ!
23. கணவன்வழி நிற்போரைக் கற்பழித் தேனோ!
24. கருப்ப மழித்துக் களித்திருந் தேனோ!
25. குருவை வணங்கக் கூசிநின் றேனோ!
26. குருவின் காணிக்கை கொடுக்க மறந்தேனோ!
27. கற்றவர் தம்மைக் கடுகடுத் தேனோ!
28. பெரியோர் பாட்டிற் பிழைசொன் னேனோ!
29. பட்சியைக் கூண்டில் பதைக்க அடைத்தேனோ!
30. கன்றுக்குப் பாலூட்டாது கட்டிவைத் தேனோ!
31. ஊன்சுவை யுண்டு உடல்வளர்த் தேனோ!
32. கல்லும் நெல்லும் கலந்து விற்றேனோ!
33. அன்புடை யவர்க்குத் துன்பஞ் செய்தேனோ!
34. குடிக்கின்ற நீருள்ள குளந்தூர்த் தேனோ!
35. வெய்யிலுக் கொதுங்கும் விருட்ச மழித்தேனோ!
36. பகைகொண்டு அயலோர் பயிரழித் தேனோ!
37. பொதுமண்டபத்தைப் போயிடித் தேனோ!
38. ஆலயக் கதவை அடைத்து வைத்தேனோ!
39. சிவனடி யாரைச் சீறி வைதேனோ!
40. தவஞ்செய் வோரைத் தாழ்வு சொன்னேனோ!
41. சுத்த ஞானிகளைத் தூஷணஞ் செய்தேனோ!
42. தந்தைதாய் மொழியைத் தள்ளி நடந்தேனோ!
43. தெய்வ மிகழ்ந்து செருக்கடைந் தேனோ!
44. என்ன பாவம் செய்தேனோ!

இன்னதென் றறியேனே!

மனுமுறைகண்ட வாசகத்திற்கு அருட்பெருஞ்சோதி ஆண்டவராகிய மகான் இராமலிங்க சுவாமிகள் திருவடியை பூசித்து அவரது மனுமுறைகண்ட வாசகத்திற்கு உரை எழுதப்படுகிறது. குற்றமிருப்பின் மகான் ஆசான் இராமலிங்க சுவாமிகள் பொறுத்தருள வேண்டும்.

### 7. ஏழைகள் வயிறு எரியச் செய்தேனோ!

சிலர் பல ஏக்கர்கள் பரப்பளவு கொண்ட நிலம் வைத்து விவசாயம் செய்வார்கள். அவர்களிடம் ஏழை கூலி விவசாயிகள் வேலை செய்து வருவார்கள். கூலி விவசாயிகள் காலையில் சாப்பிடாமல் கூட வேலைக்கு செல்லுவார்கள். அவர்களை சிறிது நேரம் கூட ஓய்வின்றி இடையறாது காலை முதல் மாலை வரை வேலை வாங்கிவிட்டு மாலையில் அவர்கள் வேலை செய்ததற்கு கூலியாக பணமோ அல்லது தானியமோ கொடுக்காமல் நேரமாகிவிட்டது, விளக்கு வைத்து விட்டார்கள், நாளை வந்து வாங்கி செல் என நில உரிமையாளர்கள் சற்றும் கருணையின்றி கூறிவிடுவார்.

ஏழை விவசாயோ அன்று கிடைக்கும் கூலியை வைத்துதான் அன்றைய இரவு அவனும் அவனது மனைவியும், குழந்தைகளும் உணவு உண்ணவேண்டிய வறிய சூழ்நிலையில் இருப்பார்கள். இரவு பொழுதில் தந்தை வேலைமுடித்து உணவிற்கு ஏதாவது கொண்டு வருவார் என குழந்தைகளும், கணவன் கொண்டு வருவதை சமைக்க தயாராக மனைவியும் இருப்பார்கள். வெறும் கையுடன் வரும் ஏழை கூலி விவசாயை பார்த்து குடும்பத்திலுள்ளோர் அனைவரும் சோர்ந்து இன்று இரவு பட்டினியாகத்தான் தூங்க வேண்டும் என மனம் வெதும்பி வெறும் வயிற்றுடன் பட்டினியாக உறங்க செல்வார்கள். இதுபோன்று உழைப்பவருடைய கூலியை தக்க நேரத்தில் கொடுக்காது காலம் தாழ்த்தி அவர்களுக்கு இன்னல் விளைவிப்பது பாவச்செயலாகும்.

### 8. தர்மம் பாராது தண்டம் செய்தேனோ!

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.

– திருக்குறள் – வெருவந்த செய்யாமை – 561.

கடுமொழியும் கைஇகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.

– திருக்குறள் – வெருவந்த செய்யாமை – 567.

இனத்துஆற்றி எண்ணாத வேந்தன் சினத்துஆற்றிச்
சீறின் சிறுகும் திரு.

– திருக்குறள் – வெருவந்த செய்யாமை – 568.

கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் நணுகநில் லானே.

– திருமந்திரம் – இராசதோடம் – 238.

ஆட்சிக்குரிய அறிவில்லாத அரசன் எமனுக்கு ஒப்பாவார். ஆட்சிக்குரிய அறிவில்லாத அரசனைவிட எமன் மிக நல்லவன். எப்படியெனில் ஆட்சிக்குரிய அறிவும், அறத்தைப்பற்றி ஆராய்ந்து அறியாத அரசன் சாரத்தை ஆராயாமல் நல்லவர்களை கொலைசெய்ய சொல்லுவான். ஆனால் காலன் என்ற எமனோ நல்லவர்களை நெருங்கமாட்டான்.

முடியாட்சி காலத்தில் சில அரசர்கள் அமைச்சர் சான்றோர்கள் இவர்களை கலந்து ஆராய்ந்து அதன்படி நடப்பார்கள். சில அரசர்களோ அமைச்சரையோ சான்றோர்களையோ கலந்து ஆலோசிக்காமல் தன்னிச்சையாக முடிவு செய்வார்கள். அவர்கள் ஆட்சி காலத்தில் நல்லவர்களும் கொல்லப்படுவார்கள். அவர்களது ஆட்சி கொடுங்கோல் ஆட்சியாகும்.

முடியாட்சி காலத்தில் குற்றம் செய்தவனை சபைக்கு கொண்டுவருவார்கள். அவனை நன்கு விசாரித்தும் மற்றும் அமைச்சர்களை சான்றோர்களை கலந்து ஆலோசித்தும் குற்றம் செய்தவனை தண்டிக்க வேண்டும். அவ்வாறு கலந்து ஆலோசிக்காமல் ஒருவனை தண்டிப்பது முறையற்ற தண்டனையாகும். இது தர்மம் பாராது செய்யும் தண்டனையாகும்.

குற்றம் செய்தவனை பற்றி நன்கு ஆராய்ந்து அதற்கு ஏற்ப தண்டனை தரவேண்டும். குற்றத்தின் தன்மைக்கு ஏற்ப தண்டனை தருவதே நீதி முறையாகும். குற்றத்திற்கு தகுந்த தண்டனை தராமல் வரம்புகடந்த தண்டனை தந்தால் அது பாவச்செயலாகும்.

---

ஞானத்திருவடி நூல் சம்மந்தமாக விபரம் தெரிந்துகொள்ள விரும்பும் சென்னை அன்பர்கள் தொடர்புகொள்ள

திரு. K.S.கைலாசம் – 98400 63510

திரு. D.ரெங்கநாதன் – 96770 17170

திரு. A.பத்மநாபன் – 044 25733917



அன்பான வாசகர்களே வணக்கம்

**உங்கள் ஆண்டு சந்தாவை புதுப்பித்துவிட்டீர்களா!**

ஞானத்திருவடி நூலை படித்து, உங்கள் உணர்வுகளை எங்களோடு பகிர்ந்துகொள்ள அன்போடு அழைக்கின்றோம்.

அன்பன் – இரா.மாதவன், 98424 55661.

## வருகிறார் அகத்தீசர்! உலக மக்களை காப்பதற்கு!!


மகான் அகத்தியர்

அருள்குரு அகத்தீசர் திருவடிகள் போற்றி

**ஒன்றே குலம் ஒருவனே தேவன்**
**நாம் அனைவரும் அகத்தியர் குலம்**
**நமது இறைவன் அகத்தீசன்**
**நமது வேதம் திருக்குறள்**
**நமது மார்க்கம் சன்மார்க்கம்**


குருநாதர்

## ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்கம்,

ஓங்காரக்குடில், துறையூர், திருச்சி மாவட்டம். © 04327 – 255184.

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு,

தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**

அவர்களின் தலைமையில் நடைபெறும்

அகத்தீசன் திருவிழா அன்னதானப்பெருவிழா மற்றும்

## சித்ராபௌர்ணமி விழா அழைப்பிதழ்

நாள் : **விக்ருதி ஆண்டு சித்திரை 15-ஆம் நாள்**
**28.04.2010 புதன்கிழமை**

இடம் : **ஸ்ரீஅகத்தியர் சன்மார்க்க சங்கம், ஓங்காரக்குடில், துறையூர்.**

நிகழ்ச்சி நிரல் :

காலை 6.00 மணியளவில்

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய அருட்பிரகாச வள்ளலார்

**இராமலிங்க சுவாமிகளின் ஜோதி தரிசனம்,**

காலை 8.30 மணியளவில்

**குருநாதர் தீட்சை வழங்கும் விழா,**

காலை 8.30 மணிமுதல் மதியம் 3.00 மணிவரை

**ஞானிகளைப் பூஜித்து அருள்பிரசாதம் (உணவு) வழங்குதல்,**

காலை 9.00 மணியளவில்

**ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்க கொடியேற்றுதல்,**

காலை 9.30 மணியளவில்

**ஞானியர்களின் சிறப்பு பூஜையும், குருநாதரின் அருளுரையும்.**

**அனைவரும் வருக! ஞானியர் அருள் பெறுக!**

03.02.2010

ஞானத்திருவடி நூலுக்கு

மகான் அருள்நந்தி சிவாச்சாரியார் அருளிய அருள்வாக்கு

சுவடி வாசித்தளித்தவர் V.T.பரணீதரன், செல் : 94430 13863

மகான் அகத்தியர் நாடிஜோதிட நிலையம், செந்தண்ணீர்புரம், திருச்சி.

# மகான் அருள்நந்தி சிவாச்சாரியார் ஆசி நூல்

1. அருளாய் வீற்றிருக்கும் அரங்கா போற்றி
அருளாட்சி நடத்திவரும் அரசா போற்றி
அருளதனை வழங்கிவரும் தேசிகா போற்றி
அருள்வடிவே நின்திருவடிகள் போற்றி போற்றி

2. போற்றியே அருள்நந்தி சிவாச்சாரியார் யானும்
புகலவந்தேன் ஆசியதை இன்று நாளில்
பார்சிறக்க பாடுபடும் அரங்கா வாழ்க
பலஉயிரை காத்துநின்ற அரசா வாழ்க

3. வாழ்கவே ஞானயுகம் நீ படைத்தாய்
வள்ளலாய் வாழ்ந்துநீ வழியைக் காட்டி
வாழ்வுபெற வைத்திட்டாய் மக்கள் தன்னை
வையகத்தின் ஞானராஜன் நீதான் ஐயா

4. ஐயனே சிவத்தின் சூட்சுமம் கண்டாய்
அருள்தந்து வாழவைத்தாய் உலகம் தன்னை
மெய்யுடனே கலியுகத்தில் ஞானம் ஓங்க
மகாமகத்துவம் பொருந்திய நூலும் தந்தாய்

5. தந்தாயே ஞானத்திருவடி எனும் ஞானநூலை
தவசிறப்பை மக்களுக்கு அளிப்பதற்கு
தந்திட்ட தவநூல் ஞானத்திருவடி நூல்
தன்னிகரில்லா நூல் தவத்தினை உணர்த்தும் நூல்

6. உணர்த்தும் நூல் உண்மைவழி சொல்லும் நூல்
உயர்வுதரும் நூல் ஞானத்திருவடி நூலே
உணர்ந்துமே ஒவ்வொரு சொல்லையும் படிப்போர்
உயர்வுதான் பெற்றிடுவார் திண்ணம் ஐயா

(ஞானத்திருவடி நூலில் வரும் ஒவ்வொரு சொற்களும் பிறவிப்பிணிக்கு மருந்தாக அமையும். எனவே ஒருமுறைக்கு இருமுறை படித்தால் உண்மை பொருளை உணரமுடியும்)

7. ஐயனே அருள்நந்தி சிவாச்சாரியார் யானும்
ஆசிதனை வழங்கினேன் சுவடி வழியே
மெய்யுடனே ஞானத்திருவடிநூல் பக்கம் எல்லாம்
மகான்களின் அருள்நிறைந்த பக்கம் ஐயா

8. ஐயனே அட்சரவடிவில்(எழுத்து வடிவில்) அவர்கள் உள்ளார்
அன்னவர்களை நினைந்துமே உருகி படிப்போர்
மெய்யுடனே அருள்பெறுவது சத்தியம் ஐயா
மேன்மைகளை வாழ்வில் பெற்று ஞானியாவார்

9. ஆவார்கள் துன்பமேது வாழ்க்கை தன்னில்
அருள்மொழியாம் அம்மொழியை படிப்பவர்கள்
ஆவார்கள் ஞானிகளாய் உண்மை ஐயா
அருள்தர வந்தநூல் ஞானத்திருவடி நூல்

10. திருவடிநூல் சித்திதரும்நூல் திக்கெட்டும் பரவி
தெளிவுதர அருள்நந்தி அளித்தேன் ஆசி
திருவடிநூல் தெய்வநூல் சத்திய வாக்கு
திருவடிநூல் வழிநடப்போர் தெய்வமும் ஆவார்

11. ஆவார்கள் சித்துக்கள் விளையாடும் அவர்க்குள்
அருளாசி பூரணமாய் அடைவார் வாழ்வில்
அவணியிலே ஞானிகள்ஆசி அவர்களுக்கு உண்டு
அறிவித்தேன் சுவடிவழி விளக்கம் தன்னை

12. தன்னிலே திருவடிநூல் ஒவ்வொரு பாகத்தையும்
தொட்டுமே வணங்கியே படிப்போர் வாழ்வில்
நன்மைபல வந்தடையும் ஆசியுண்டு
நாட்டினேன் அருள்நந்தி ஆசிநூல் இப்பாகம் முற்றே.

–சுபம்–

# திருமந்திரம் பாடல்களுக்கு

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு,

## தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகள்

அவர்கள் அருளிய அருளுரை

### உபதேசம் – தொடர்




போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியை
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினார்
நாதன் நடத்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந்தார் விண்ணே.

– திருமந்திரம் – உபதேசப்பகுதி 30 – கவி எண் 142.

போதம் என்பது ஞானம் அல்லது அறிவாகும். "போதம் தரும் எங்கள் புண்ணிய நந்தி" என்பதால் ஞானிகள் அத்தனைபேரும் புண்ணியம் செய்தவர்களாகும். புண்ணியம் செய்யாமல் ஒருவருக்கு ஞானவாழ்வு கைகூடாது. புண்ணியவானாகிய மகான் நந்தீசன் திருவடியை மகான் திருமூலதேவர் தினமும் உருகி தியானம் செய்ததால் அவருக்கு ஞானவாழ்வு கைகூடியது. இங்கு என் நந்தி என்று சொல்லாமல் "எங்கள் நந்தி" என கூறுகிறார். "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் வந்தவர்களில்" திருமூலதேவரும் ஒருவர். ஆதலால் அவ்வாறு சொன்னார். மகான் நந்தீசர் திருவடியை தினமும் பூசித்ததால் ஆசான் மகான் திருமூலதேவரும் புண்ணியரானார். மாபெரும் புண்ணியவானாகிய நந்தீசர் திருவடியை பற்றியதால் திருமூலதேவரும் புண்ணியரானார்.

இடகலையும் பின்கலையும் சுழிமுனையில் ஒடுங்கினால் உருதரித்த நாடியாகிய குண்டலினியில் ஒடுங்கும். அவ்வாறு ஒடுங்க அங்கு ஓங்காரம் தோன்றும். அது காலப்போக்கில் ஓங்காரத்துடன் கலந்த ரீங்காரமாக மாறி இரண்டும் கலந்து ஒலிக்கும். அச்சமயம் மூலக்கனலின் அனல் மிகுதியாகி அந்நாதங்கள் படிப்படியாக விரிவடைந்து தசநாதங்களாக மாறிய உடன் சுழிமுனைக்கதவு திறக்கும். சுழிமுனைக்கதவு திறந்த உடன் அங்கு முச்சுடர்கள் தோன்றும். அந்த முச்சுடர்களும் மாறிமாறி இயங்கி சொல்லொண்ணா பேரானந்தத்தை தரும். இந்நிகழ்வு திருநடனக் காட்சி எனப்படும். இதை அடைந்தவர்கள் இக்காட்சியை தனது புருவமத்தியாகிய சுழிமுனையில் கண்டு பேரானந்தத்தில் லயித்து இருப்பார்கள். இந்நிலை அடைபவர்களே ஞானிகள் ஆவார்கள்.

மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபேரி கையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கஒண் ணாதே.

– திருமந்திரம் – தியானம் – 606.

மேற்கண்ட தசநாதங்களையும் அறிய விரும்பினால் மகான் நந்தீசரையும், மகான் திருமூலரையும் பணிந்து திருவடியைப் பற்றி பூசித்தால் மேற்கண்ட வாய்ப்பை பெறலாம்.

ஒலிபடருங் குண்டலியை உன்னியுணர் வாலெழுப்பிச்
சுழுமுனையின் தாள்திறந்து தூண்டுவது மெக்காலம்.

– மகான் பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பல் – 94.

இவர்கள் மாபெரும் புண்ணியவான்கள் ஆவார்கள். இவர்களை வேதங்களும் போற்றும்; ஆன்மீகவாதிகளும் போற்றி மகிழ்வார்கள். இவையனைத்தும் மாபெரும் புண்ணியவானாகிய மகான் நந்தீசர் அருளால் பெற்ற பெரும்பேறாகும். நாமும் இந்த வாய்ப்பை பெறவேண்டுமென்றால் புண்ணியவானாகிய மகான் நந்தீசரையும், மகான் திருமூலதேவரையும், “ஓம் நந்தீசர் திருவடிகள் போற்றி” என்றும், “ஓம் திருமூலதேவர் திருவடிகள் போற்றி” என்றும் தினமும் நாமஜெபமாகிய பூஜை செய்து வந்தால் மேலான வாழ்வாகிய ஞானவாழ்வை பெற்று பேரின்பம் பெறுவோம்.

மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூல னுரைசெய்த முந்நூறு மந்திரம்
மூல னுரைசெய்த முப்ப துபதேசம்
மூல னுரைசெய்த மூன்றும் ஒன்றாமே.

– திருமந்திரம் – சர்வவியாபி – 3046.

மகான் திருமூலர் அருளிய உபதேசம் முப்பது பாடல்களில் கடல் போன்ற கருத்துக்கள் அடங்கியுள்ளது. அதில் ஒரு துளி நீரளவே விளக்கம் தரப்பட்டுள்ளது. உபதேசப்பகுதி முப்பது பாடல்களும் ஆசான் மகான் திருமூலதேவரால் உணர்த்தப்படக்கூடிய ஒன்றாகும். இதற்கு உரைகாணமுடியாது.

திருமந்திரம் உபதேசபகுதி முப்பது பாடல்களும் எனது ஆசான் சித்த தத்துவ மேதையும், தத்துவ மேதையுமான செ.பெ.சின்னசாமி சாஸ்திரி அவர்களால் எனக்கு கூறப்பட்ட விளக்கத்தின் அடிப்படையில் எழுதப்பட்டதாகும். குற்றமிருப்பின் பெரியோர்கள் பொறுத்தருளும்படி திருவடி பணிந்து கேட்டுக்கொள்கிறேன்.

## மகான் மெய்கண்ட தேவர் அருளிய
## சிவஞானபோதம் பாடல்களுக்கு

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு,

தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்** அருளிய அருளுரை

மகான் மெய்கண்ட தேவர் திருவடியை பூஜித்து அவரால் எழுதப்பட்ட சிவஞான போதத்திற்கு விளக்கம் எழுதுகிறோம். அவர் ஆசி இல்லாமல் இதற்கு விளக்கம் எழுத முடியாது. அவரே அகமும் புறமும் இருந்து உணர்த்த வேண்டுமென்று வேண்டி எழுதப்படுகிறது.

சிவஞானபோதம் என்பது சிவத்தை அறியும் அறிவு (ஞானம்).

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

– சிவஞானபோதம் – நான்காம் சூத்திரம்.

“அந்தக் கரணம் அவற்றின் ஒன்றுஅன்றுஅவை
சந்தித்தது ஆன்மாச் சகசமலத்து உணராது
அமைச்சு அரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே.”

பூசிக்க வொட்டாது மனந்தானப்பா
போதங்கள் மீதேறிச் செல்லொட்டாது
பூசிக்கவொட்டாது அஞ்சிலொன்று
புகழான பூரணத்தை நாடொட்டாது
காசிக்குப் போனாலுந் தீர்க்கொட்டாது
கர்மவினை தன்னைவிட்டுப் போமோமைந்தா
தேசிகன்றன் திருவருளை நாடொட்டாது
செப்பரிய ரெண்டெழுத்தின் சோதிதானே.

– தெட்சிணாமூர்த்தி ஞானம் 10ல் கவிஎண் 1.

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்து<u>சும் மாவிருக்கப்</u>
போதா யினிமன மே!தெரி யாதொரு பூதர்க்குமே.

– கந்தரலங்காரம் – கவிஎண் 17.

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
<u>சும்மாஇரு சொல்லற</u> என்றலுமே
அம்மாபொருள் ஒன்றும் அறிந்திலனே.
– கந்தரநுபூதி 12.

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ? பராபரமே!
– தாயுமானவர் – பராபரக்கண்ணி 70.

சும்மா இரு என்ற சொல்லையும் மோனநிலை என்ற சமாதியையும் அறிந்தவர்கள்தான் சிவஞான போதத்தைப் பற்றி அறியமுடியும்; அறிந்து உணரக்கூடிய ஒன்றே தவிர அதனை விவரிக்க இயலாது. சிவஞானபோதம் என்பது சிவனைப்பற்றி அறிகின்ற அறிவாகும்(ஞானம்). போதம் என்பது அறிவு அல்லது ஞானம் எனப் பொருள்படும்.

மகான் மெய்கண்ட தேவர், மகான் சிவஞான சித்தியார், மகான் அகத்தியர், மகான் திருமூலர், மகான் புலத்தீசர், மகான் போகர், மகான் காலாங்கிநாதர், மகான் திருஞானசம்மந்தர், மகான் திருநாவுக்கரசர், மகான் மாணிக்கவாசகர், மகான் சுந்தரமூர்த்தி நாயனார் போன்ற முற்றுபெற்ற ஞானிகளின் திருவடியைப் பற்றி பூஜித்து ஆசி பெறுபவர்களுக்கு மட்டும் சிவனைப் பற்றியும், சிவனை அடையும் மார்க்கத்தைப் பற்றியும் அறியமுடியும்.

குருவின் அடிபணிந்து கூடுவது அல்லார்க்கு
அருவமாய் நிற்குஞ் சிவம்.
– ஔவைக்குறள்.

குருநாதன் திருவடியைப் பற்றி பூசித்தால்தான் சிவனை அறியமுடியும். இல்லையெனில் சிவம் புலப்படாமல் போய்விடும்.

## சிவஞானபோதம் நான்காம் சூத்திரத்தின் சாரம் :–

அந்தக்கரணம் என்பது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என நான்காகும். ஆன்மா அந்த கரணங்களைப் பற்றியும், மற்றக் கருவிகளைப் பற்றியும் அதாவது தத்துவம் 96ஐப் பற்றியும் அறிய முடியாது. சிறப்பறிவுள்ள அமைச்சரின் ஆலோசனைப்படி மன்னன் செயல்படுவதுபோல் ஆசான் மெய்கண்டதேவர் நம் அறிவோடு சார்ந்திருந்து, அறிவோடு பொருந்தி நின்று, மனம், புத்தி, அகங்காரம், சித்தம் பற்றியும், உடலில் உள்ள கருவிகளைப் பற்றியும் உணர்த்த வேண்டும். உடல்மாசு பற்றியும், உடல் மாசின் காரணமாக

வந்த உயிர்மாசு பற்றியும், உயிர் மாசால் அறிவு மாசடைந்தது பற்றியும் உணர்த்தப்பட வேண்டும்.

இந்த உடம்பு சகசமலத்தால் ஆனது. தினமும் நாம் உண்ணும் அறுசுவை உணவால் இந்த தேகம் சகசமல தேகம் ஆயிற்று. மலக்குற்றம் இருக்கும் வரையில் உண்மைப் பொருள் அறிய முடியாது. ஆசான் உடம்பில் சார்ந்திருந்து மும்மலக் குற்றமாகிய களிம்பை அறுத்தால் தூல தேகத்திலுள்ள மாசு நீங்கும். தூலதேக மாசு நீங்கினால் சூட்சுமதேகமாகிய ஒளிஉடம்பை அறிய முடியும். தூலதேகமாகிய மாசு உடம்பால், உயிரை அறிய முடியாது. சூட்சும தேகம் ஆக்கம் பெறும்போது உடம்பைப் பற்றியும், உயிரைப் பற்றியும் அறிய முடியும். உடம்பைப் பற்றியும், உயிரைப் பற்றியும் அறிகின்றவர்கள்தான் தன்னைப்பற்றி அறிவார்கள். தன்னைப்பற்றி அறிந்தவர்கள்தான் தலைவனைப்பற்றி அறிவார்கள். இவர்களே மும்மலக் களிம்பற்ற ஞானிகள் ஆவார்கள்.

"களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே."

– திருமந்திரம் 114.

"மட்டகன்ற நெடுங்காலம் மனத்தால் வாக்கால்
மதித்திடினும் புலம்பிடினும் வாரா தென்றே
கட்டகன்ற மெய்யறிவோர் கரணம் நீக்கிக்
கலையகற்றிக் கருவியெலாம் கழற்றி மாயை
விட்டகன்று கருமமல போதம் யாவும்
விடுத்தொழித்துச் <u>சகசமல வீக்கம் நீக்கிச்</u>
சுட்டகன்று நிற்கஅவர் தம்மை முற்றும்
சூழ்ந்துகலந் திடுஞ்சிவமே துரியத் தேவே."

– திருஅருட்பா – மகாதேவமாலை – 168.

சகசமலவீக்கம் என்பது அறுசுவை உணவால் உடம்பு பெருத்தலை குறிக்கும். மலத்தாலான களிம்பை அறுக்கும் வரையில் தலைவனைப் பற்றியும், தன்னைப் பற்றியும் அறிய முடியாது. இடகலையும், பிங்கலையும் சுழிமுனையில் செலுத்தினால் அந்தக் காற்று உருத்தரித்த நாடியெனும் சுழிமுனையில் ஒடுங்கும். அவ்வாறு ஒடுங்கினால் மெல்லமெல்ல மும்மலக்குற்றம் நீங்கிவிடும். உருத்தரித்த நாடி என்பது குண்டலினி சக்தி இருக்கும் இடமாகும். அந்த குண்டலினி சக்தி விழிப்படைவதற்கு சில

ஆண்டுகளாகலாம். விழிப்படைந்த குண்டலினி சக்தி வினாத்தண்டில் மயிரிழை போன்ற நரம்பு வழியாக உச்சியை வந்தடையும். உச்சியை வந்தடைந்தால் புருவமத்தியில் ஒருவகையான உணர்வும் தோன்றும். அவ்வாறு தோன்றியஉடன் புருவமத்தியின் வழியாக காற்றை உள்ளிழுக்க அக்காற்றானது மயிரிழை போன்ற நரம்பின் வழியாக மூலாதாரத்தை சென்றடைந்து மூலக்கனலை மேலும் தூண்டும்.

இவ்வாறு எழும்பிய மூலக்கனலானது வினாத்தண்டின் வழியாக மேலேறி கபாலத்தின் உச்சியை சென்றடையும். இவ்வாறு சென்றடைந்தவுடன் மேலும் காற்றை ஸ்தம்பிக்க ஸ்தம்பிக்க உள்நாவிற்கு மேலேஉள்ள ஊசிமுனை அளவுள்ள ஜவ்வானது திறந்து அமிழ்தபானம் சிந்தும். இந்த அமிழ்த பானமே பிறவித் துன்பத்தை ஒழிக்கும் மருந்தாகும்.

சிவஞான போதமும் அதன் பன்னிரெண்டு சூத்திரங்களும் இதைப் பற்றியே பேசுவதாகும். ஐந்தவத்தை என்பது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்தாகும். சாக்கிரம் என்பது லலாடம் அல்லது ஆக்ஞை அல்லது புருவ மத்தியாகும். வாசி வசப்பட்டப்பின் புருவமத்தியில் மனம் ஒடுங்கி கூர்பார்வை செலுத்த வேண்டும். மனம் ஒருநிலைப்பட்டு கூர்பார்வை செலுத்தினால்தான் மூலக்கனல் தோன்றும். ஆனால் மனம் ஒருநிலைப்படாது. இவ்வாறு மனம் ஒருநிலைப்படாமல் போராடுவதே அவஸ்தையாகும். இது சாக்கிர அவஸ்தை எனப்படும். இதற்கு முன்செய்த வினையே காரணமாகும். ஆசான் துணையிருந்தால் மனம் ஒருநிலைப்படும்.

பூசிக்க வொட்டாது மனந்தானப்பா
போதங்கள் மீதேறிச் செல்லொட்டாது
பூசிக்கவொட்டாது அஞ்சிலொன்று
புகழான பூரணத்தை நாடொட்டாது
காசிக்குப் போனாலுந் தீர்க்கொட்டாது
கர்மவினை தன்னைவிட்டுப் போமோமைந்தா
தேசிகன்றன் திருவருளை நாடொட்டாது
செப்பரிய ரெண்டெழுத்தின் சோதிதானே.

– தெட்சிணாமூர்த்தி ஞானம் 10ல் கவிஎண் 1.

குரு அருளால் முன்செய்த வினைகள் நீங்கினால் மனமும் ஒடுங்கும், மூலக்கனலும் தோன்றும், அமிழ்தபானமும் சிந்தும். அமிழ்தபானத்தை உண்டால் உடல்மாசும் உயிர்மாசும் நீங்கும். அப்போது புருவமத்தியில் கோடி சூரியபிரகாசமுள்ள ஒளி ஒன்று தோன்றும். அந்த ஜோதியைக் கண்டவர்கள் சொல்லொண்ணா பேரானந்தம் அடைவர். இதுவே குருஅருளால் பெற்ற பெரும் பேறாகும்.

கனவில் பாம்பு துரத்துவது போலும்; ஒருவர் நம்மை கொலை செய்யவருவது போலும் கனவு காண்பார்கள். அப்போது மனதில் ஒருவித பயம் தோன்றும். இதுவே சொப்பன அவஸ்தையாகும். இதன் இடம் கண்டஸ்தானம்.

சுழுத்தி என்பது தூக்கமாகும். தவத்தை மேற்கொண்டவர்கள் அதிக நேரம் தூங்கக்கூடாது. அவ்வாறு நீண்ட நேரம் கண்விழித்திருப்பதும் ஒருவித அவஸ்தையாகும். இதன் இடம் இதயம்.

துரியம் என்பது உந்திகமலமாகும்.

துரியாதீதம் என்பது உந்திக்கமலத்திற்கு கீழ்பகுதியாகும். இவ்வைந்து அவஸ்தைகளும் காமதேகத்தினால் வரும் அவஸ்தைகளாகும்.

மகான் மெய்கண்ட தேவர் அருளிய 12 சூத்திரங்களும் மகான் மெய்கண்ட தேவரால் உணர்த்தக்கூடிய ஒன்றாகும். இதை விவரித்து எழுத முடியாது. அவரவர்கள் உணரக்கூடிய ஒன்றாகும்.

நீற்றைப் புனைந்தென்ன நீராடப்போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திர மென்ன கண்டாய்
ஆற்றிற் கிடந்தும் துறையறியாமல் அலைகி ன்றையே.

– மகான் பட்டினத்தார்.

எல்லா நூல்களும், கோடானுகோடி சாத்திரங்களும் ஞானத்தைப் பற்றிச்சொன்னாலும் நம்மால் அறிய முடியாது. குருநாதர் ஆசியால்தான் சாஸ்திரங்களில் உள்ள கருத்தை அறிந்து ஜென்மத்தை கடைத்தேற்ற முடியும்.

முருகன் தனிவேல் முநிநம் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே.

– கந்தரநுபூதி 13.

“முருகன் தனிவேல் முநிநம் குருவென்று
அருள் கொண்டு அறியார் அறியும் தரமோ
உருஅன்று அருஅன்று உளதன்று இலதன்று
இருளன்று ஒளியன்று என நின்றதுவே”

நீலச் சிகண்டி யிலேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே.

– கந்தரலங்காரம் 26.

“குருநாதன் சொன்ன சீலம்” என்பது சும்மா இரு என்ற சொல்லாகும். இந்த சொல்லின் இரகசியத்தை அறிந்தவர்கள் காலனை வென்ற சிவயோகிகளாகும்.

சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே.

– திருமந்திரம் 2119.

குருநாதன் அருளால் இறைவனை அடையலாம்.

“எல்லாம் செயல்கூடும் என்ஆணை அம்பலத்தே
எல்லாம்வல் லான்தனையே ஏத்து.”

– அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள்.

“ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கும்; அந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்கும்” எனமொழிந்த
குருமொழியே மலையிலக்கு; மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்!
கருமொழியிங் குனக்கில்லை; மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங் கண்டனை; மேல்
தருமொழியிங் குனக்கில்லை; உன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே!

– தாயுமானசுவாமி பாடல்கள் – 17. நினைவு ஒன்று – 9.

ஒரு மொழியே என்பது சும்மா இரு என்ற சொல்லாகும்.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

– சிவஞானபோதம் – ஐந்தாம் சூத்திரம்.

"விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே."

மகான் மெய்கண்ட தேவரிடம் சீடர்கள் இறைவனைப் பற்றியும், இறைவனைப் பூசிக்கும் முறையைப் பற்றியும் கேட்டார்கள். ஆசானும் மனம் மகிழ்ந்து இறைவனை பூசிக்கும் முறையை உபதேசித்தார். உபதேசம் பெற்ற சீடர்களும் தமது குருவான மகான் மெய்கண்ட தேவரின் திருவடிகளை பூசித்து ஆசி பெற்று இறைவனை பூசித்தனர். இறைவனும் சீடர்களின் பூஜைக்கு மனமிரங்கி அவர்தம் சிந்தையில் கலந்து மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவற்றின் இரகசியங்களையும், அவற்றை கட்டுப்படுத்துவது பற்றியும், தன்வயப்படுத்துவது பற்றியும் உணர்த்தினார். இறைவன் திருஅருளால் உணரப்பெற்ற சீடர்கள் இறைவனின் திருவடியைப்பற்றி பொறிபுலன் அடக்கத்தோடு பூசித்தனர். அப்பூசைகளின் விளைவாக காந்தத்தை கண்ட இரும்புத்துகள் காந்தத்துடன் தானே சென்று சேர்ந்து கொள்வது போல சீடர்களும் இறைவனது திருவடியை அடைந்தனர் என்பதை மகான் மெய்கண்ட தேவர் இவ்வைந்தாம் சூத்திரத்தின் மூலம் விளக்குகிறார்.

இதன்படி குருநாதர் உணர்த்தினாலன்றி இதன் இரகசியம் புரியாது. இதன் இரகசியம் இறைவனால் உணர்வில் உணர்த்தப்பட வேண்டுமேயன்றி சொல்வதாலோ, கேட்பதாலோ, படிப்பதாலோ அறிய இயலாது என்பது விளங்கும்.

சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே.

– திருமந்திரம் – இதோபதேசம் – 2119.

எனவே குரு அருள் இன்றி இறையருள் பெற முடியாது என்பது பெரியோர் வாக்காகும்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

– சிவஞானபோதம் – ஆறாம் சூத்திரம்.

"உணருரு அசத்துஎனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்கும் மன்உலகே"

உரு என்பது உடம்பு. அதாவது தூலதேகம். இது சகசமலமாகிய மும்மலத்தால் ஆனது. மும்மலத்தாலான இத்தேகம் அசத்தாகும். அசத்தாகிய இத்தேகத்தினால் இறைவனை அறிய இயலாது. ஏனெனில் உடல்மாசு காரணமாக உயிர் மாசுபடும். உயிர்மாசின் காரணத்தால் சத்தாகிய உண்மைப் பொருளை அறிய முடியாது. எனவே குருஅருளாலும் இறைவன் திருஅருளாலும் அசத்து எனப்படும் மும்மலக் குற்றத்தாலான தூலதேகத்தை பற்றியும் சத்தாகிய சூட்சும தேகத்தைப் பற்றியும் அறிய முடியும். அசத்தை அறிவதற்கும் சிறப்பறிவு வேண்டும். சத்தை அறிவதற்கும் சிறப்பறிவு வேண்டும். தூலத்தை பற்றி அறிவதும், சூட்சுமத்தைப் பற்றி அறிவதும் இருதிறன் எனப்படும். இதுவே சிறப்பறிவாகும்.

சத்தே சிவமாகவும், சிவமே சத்தாகவும் சிவசத்தாம் என்று அறிவுடையவர்கள் சொல்வார்கள். "உலகு என்பது உயர்ந்தோர் மாட்டு" என்று சொல்வார்கள். எனவே சத்தே சிவமாகவும் சிவமே சத்தாகும். இதை உண்மைப் பொருளுணர்ந்த ஞானிகளே சொல்வார்கள்.

இந்த உடம்பானது குளிர்ச்சியும் வெப்பமும் கலந்ததாகும். குளிர்ச்சி சக்தியாகவும், வெப்பம் சிவமாகவும் உள்ளது. வெப்பம் மிகுந்தால் அதாவது சிவம் மிகுந்தால் சக்தியாகிய குளிர்ச்சி வற்றிவிடும். சக்தியாகிய குளிர்ச்சி வற்றியபின் நிலைத்து நிற்பது சிவமாகிய வெப்பம் மட்டுமே. எனவே உடம்பென்பது சிவசக்தியாகும். இதையே அர்த்தநாரி என்று கூறுவர்.

தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமும் கொண்டதென்
றெண்டிசை நந்தி எடுத்துரைத் தானே.

– திருமந்திரம் – மகேசுவரபூஜை – 1858.

இதில் தண்டறுசிந்தை என்பது குளிர்ச்சியாகிய சக்தியை அறுப்பது எனப்பொருள்படும். அங்ஙனம் குளிர்ச்சியாகிய சக்தியை அறுத்து வெற்றி கண்டவர்களே ஞானிகள் ஆவார்கள். அவர்களே முக்காலமும் உணர்ந்த முனிவர்கள் ஆவார்கள். அவர்கள் ஒரு அன்பர் வீட்டில் ஒரு நேரம் உணவு மகிழ்ந்து உண்டால் மூன்று புவனங்கள் உண்டதற்கு சமமாகும். எனவே அத்தகு ஞானிகள் உண்ணும் உணவு அவர் மகிழ்ந்து உண்ணும் உணவாக

இருக்க வேண்டும். ஒரு முற்றுபெற்ற ஞானி ஒரு வீட்டில் உணவு உண்டால் மூன்று புவனங்களில் உள்ளவர்கள் உணவு உண்டதற்கு ஒப்பாகும். அந்த இல்லத்தார் மூன்று புவனங்களுக்கு உணவளித்த புண்ணியத்தை பெறுவார்கள். “எட்டு திசைக்கும் தலைவனாகிய நந்தீசன் இதை எடுத்துச் சொன்னார்” என கூறுகிறார் மகான் திருமூலர்.

அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம் ஆயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயந் தானே.

– திருமந்திரம் – மகேசுவரபூஜை – 1860.

பகரும் ஞானி என்பது உண்மைப் பொருள் உணர்ந்த ஞானிகளை குறிக்கும். உண்மைப் பொருளுணர்ந்த ஞானிகள் சொற்கள் ஒவ்வொன்றும் பிறவிப்பிணிக்கு மருந்தாக அமையும்.

மகான் மெய்கண்ட தேவர் உண்மைப்பொருளை அதாவது மெய்ப்பொருளை அறிந்தவராவார். மகான் மெய்கண்ட தேவரின் சிவஞான போதம் என்ற நூலில் உள்ள 12 சூத்திரங்களும் பிறவிப்பிணிக்கு மருந்தாக உள்ளது. எனவே அவர் திருவடியை பூசித்து உண்மைப் பொருளை அறிந்து பேரின்ப வாழ்வை பெற்று இன்புற்று வாழ்வோம்.

## ஓங்காரக்குடில் ஆசான் ஆசி!



ஓங்காரக்குடிலில் நடைபெறும் அன்னதானம் மற்றும் அறப்பணிகளுக்காக, தமிழகமெங்கும் ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்கம் சார்பாக திருவாளர்கள் கே.எஸ்.கைலாசம், பத்மநாபன், சுபாஸ், ராமமூர்த்தி, ரெங்கநாதன், திருமுகம் மற்றும் பல்வேறு அன்பர்கள் நமது ஞானத்திருவடி மாத இதழை தினசரி பொதுமக்களுக்கு வினியோகம் செய்கிறார்கள்.

ஞானத்திருவடி நூலை பொதுமக்களுக்கு கொண்டு சேர்க்கும் அன்பர்களுக்கும், அவர்கள் குடும்பத்தாருக்கும் எல்லாம் வல்ல ஞானிகள் அருள் கிட்டி எல்லா நன்மைகளும் அடைவார்கள். மேலும் உடல் ஆரோக்கியமும், நீடிய ஆயுளும், எல்லா நலமும் வளமும் பெறுவார்கள். மேலும் ஞானமும் சித்திக்கும் என்று ஓங்காரக்குடில் ஆசான் ஆசி வழங்கியுள்ளார்கள்.

## அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் அருளிய அருட்பெருஞ்ஜோதி அகவல்

வாடுதல் நீக்கிய மணிமன்று இடையே
ஆடுதல் வல்ல அருட்பெருஞ்ஜோதி
நாடகத் திருச்செயல் நவிற்றிடும் ஒருபேர்
ஆடகப் பொது ஒளிர் அருட்பெருஞ்ஜோதி
கற்பனை முழுவதும் கடந்து ஒளிதரும் ஓர்
அற்புதச் சிற்சபை அருட்பெருஞ்ஜோதி
ஈன்ற நற்றாயினும் இனிய பெருந்தயவு
ஆன்ற சிற்சபையில் அருட்பெருஞ்ஜோதி
இன்புறுநானுளத் தெண்ணியாங்கு எண்ணியாங்கு
அன்புறத் தருசபை அருட்பெருஞ்ஜோதி

**ஜீவகாருண்ய ஒழுக்கமே கடவுள் வழிபாடு**

அகத்தியர் துணை

நிறுவனர், சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

தவத்திரு **ரெங்கராஜதேசிக சுவாமிகள்**

அவர்கள் தலைமையில்

## ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க அறக்கட்டளையின்

## நித்திய செயல்பாடுகள்

| | |
|---|---|
| காலை 6.00 | ஆசான் அகத்தீசர் ஜோதி வழிபாடு<br>ஞானியர் அருளிய நூல்கள் பாராயணம்<br>தியானம் (நாமஜெபம்) |
| காலை 7.30 | பெருமாள்மலை அடிவாரத்தில் அன்னதானம். |
| காலை 8.00 | ஓங்காரக்குடிலில் அன்னதானம் |
| **காலை 9.30** | சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு<br>தவத்திரு **ரெங்கராஜதேசிக சுவாமிகள் தரிசனம்** |
| மதியம் 12.30 | பெருமாள்மலை அடிவாரத்தில் அன்னதானம் |
| மதியம் 1.00 | ஓங்காரக்குடிலில் அன்னதானம் |
| மாலை 6.30 | அருட்ஜோதி வழிபாடு<br>தியானம் (நாமஜெபம்)<br>ஆசான் அகத்தீசர் வழிபாடு<br>ஞானியர் அருளிய நூல்கள் பாராயணம் |

குறிப்பு: பிரதி வியாழக்கிழமை தோறும் காலை 9.30 மணியளவில் ஞானியர்கள் சிறப்பு பூஜையும், குருநாதர் அவர்களின் தரிசனமும் நடைபெறும்.

ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க அறக்கட்டளைக்காக வெளியிடுபவர்

S.செந்தில்குமார், நிர்வாக அறங்காவலர்,

113–நகர் விரிவாக்கம், துறையூர்–621 010, திருச்சி மாவட்டம்.

ஆசிரியர் – இரா.மாதவன்.

அச்சிட்டோர் :

இராம.தொல்காப்பியன்,

வாஞ்சி மறுதோன்றி அச்சகம், கூட்டுறவு நகர், துறையூர்.

"சிவயசிவ சிதம்பர இராமலிங்காய பரப்பிரம்மனே நம"



ஓங்காரக்குடில் ஆசான், சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

**தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய அருட்பிரகாச இராமலிங்க சுவாமிகளை உருகி தியானிக்க தியானிக்க எல்லா நன்மைகளும் நம்மை நாடிவரும்.

பிரச்சனைகள் தீரவும், தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள் மற்றும் பண்டிகை நாட்களிலும் அன்னதானம் செய்ய விரும்புகின்றவர்கள் DD, Cheque, M.O., மூலம் உங்களின் அருட்கொடையினை வழங்கலாம். தங்கள் நன்கொடைக்கு 80G பிரிவின் கீழ் வருமானவரி விலக்கு உண்டு.

DD, Cheque, M.O., எடுக்க வேண்டிய முகவரி:

**SRI AGATHIAR SANMAARGA CHARITABLE TRUST,**

**Payable at Thuraiyur or Trichy**

அனுப்ப வேண்டிய முகவரி:

**SRI AGATHIAR SANMAARGA CHARITABLE TRUST,**
113-Extension, Thuraiyur - 621 010, Trichy Dt.,
Tamil Nadu, India. Ph : 04327 - 255184.
Homepage : www.agathiar.org
email : agathiartrust.in@agathiar.org

Registered with the Registrar of Newspaper for India under No.TNTAM18193-160708,
Regd.No.SP.SRM/L/RNP/08/09-10.

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**

சிவாய அகத்தீசாய நம
சிவாய நந்தீசாய நம
சிவாய திருமூலதேவாய நம
சிவாய கருவூர் தேவாய நம
சிவாய பதஞ்சலி தேவாய நம
சிவாய இராமலிங்க தேவாய நம

சகல நன்மைகளைத் தரக்கூடிய மேற்கண்ட மகாமந்திரங்களை காலை மாலை 30 நிமிடம் நாமஜெபம் செய்து ஞானிகள் ஆசி பெறுவோம்.